# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY.

Saturday, the 20th August 1960.

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

### STARRED QUESTIONS.

*Recovery of loans from handloom weavers*

* 316 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

வடார்க்காடு மாவட்டத்தில் சர்க்கார் கடனைத் திருப்பிக் கட்டாததன் காரணமாக எத்தனை கைத்தறி நெசவாளர்களின் சொத்துக்கள் ஜப்தி செய்யப்பட்டன ?

THE HON. SRI R. VENKATARAMAN : No properties of Weavers in North Arcot district have been attached for non-repayment of loans sanctioned by Government.

SRI S. M. ANNAMALAI : ஸார், சொத்துக்களை ஜப்தி செய்யா விட்டாலும் கூட, கடன்களை உடனடியாக வசூலிக்க கிராம அதிகாரிகள் முயற்சிக்கிறார்கள் ; நூல் விலை அதிகம் ஏறி இருப்பதால், அவர்களிடையே அதிக கஷ்டம் நிலவுவதால், குறைந்த பட்சம் இரண்டு ஆண்டுகளுக்காவது கடன் வசூலிப்பதைத் தள்ளிப் போட சர்க்கார் முன் வருவார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் சொல்லுவது சரியில்லை ; கூட்டுறவு இயக்கத்தில் இருப்பவர்களுக்கு நூல் விலை அதிகரிப்பதனால் பாதகம் ஒன்றும் இல்லை. அதிகரித்த நூல் விலையைக் கொடுத்தும், நியாயமான கூலி கொடுத்தும், அதற்குமேல், ஆறேகால் சதவிகிதம் கொடுத்து விற்பனைக்கு ஏற்பாடு செய்கிறார்கள். ஆதலால் நூல் விலை அதிகரிப்பால் அவர்கள் பாதிக்கப்படுவதாகச் சொல்லுவது சரியில்லை. இந்தக் கடன் தொகை சம்பந்தப்பட்டவரை, அதை சிறு சிறு இன்ஸ்டால்மெண்டாகத்தான் வசூல் செய்கிறோம். சிறுகச் சிறுகக் கொடுப்பதுதான் நெசவாளர்களுக்கும் நல்லது.

SRI A. MARIAPPAN : இம்மாதிரிச் சிறுகச் சிறுக வசூலிப்பதில் ஒரு சில அரசியல் கட்சியின் தலையீட்டினால் தடை ஏற்படுகிறது என்பது அமைச்சரவர்களுக்குத் தெரியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : என்ன காரணம் என்று தெரியவில்லை. ஆனாலும், சிலர் கடனைக் கொடுக்க வேண்டாம் என்று பிரசாரம் செய்வதாகத் தெரிகிறது.

SRI T. T. DANIEL : Sir, may I know what action the Government usually take when weavers are unable to pay back their loans?

THE HON. SRI R. VENKATARAMAN : Ordinarily persuasion.

SRI S. M. ANNAMALAI : ஸார், கூட்டுறவு இயக்கத்தில் சேராதவர்களிடமிருந்து கடன் வசூலிக்கப் படுகின்றன ; அவர்களுக்கு, கூட்டுறவு இயக்கத்தில் சேர்ந்தவர்களைப் போன்று, கூட்டுறவு நன்மைகள் ஏற்படுவதில்லை ; அப்படிப்பட்டவர்களிடமிருந்து கடன்களை வசூலிக்க குறைந்த பட்சம் இரண்டு ஆண்டுகள் தள்ளிப் போட சர்க்கார் முன் வருவார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : கூட்டுறவு இயக்கத்தில் சேராதவர்களைப் பற்றி தனிக் கேள்விதான் போடவேண்டும் ; அதைப் பரிசிலனை செய்து, சர்க்கார் வேண்டிய நடவடிக்கை எடுப்பார்கள்.

SRI M. S. SELVARAJAN : ஸார், துணி விலை அதிகமாகியிருப்பதன் காரணமாக, விற்பனைத் தேக்கம் ஏற்பட்டால், அத்தகைய தேக்கத்தைத் தவிர்க்க, அரசாங்கமே விற்பனைக்கு ஏற்பாடு செய்து இருப்பது உண்மையா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இன்று அந்த விதமான நிலை இல்லை. மில் துணியை விட கைத்தறித் துணி மலிவாகவே இருக்கிறது, ஸ்டாக் அதிகமாக இல்லை, விற்பனையும் நடக்கிறது.

SRI A. A. RASHEED : Sir, may I know whether the Government have any information regarding the amount of loan due from the weavers in the North Arcot district?

THE HON. SRI R. VENKATARAMAN : A separate question may be put.

*Bridge across Tambaraparani*

* 317 Q.—SRI D. S. AUTHIMOOLAM : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether there is any proposal to construct a bridge between Viravanallur and Mukkudal, Tirunelveli district, across the river Tambaraparani; and

(*b*) if so, the stage at which the matter stands now?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) No, Sir. (*b*) Does not arise.

SRI D. S. AUTHIMOOLAM : ஸார், இந்த முக்கூடல் பகுதி, கைத்தொழில்கள் சம்பந்தப்பட்ட இடம் ; 50,000 தொழிலாளர்களுக்கு மேல் வேலைசெய்யும் தொழில்களைக் கொண்ட இடம். சிறு கிராமம் ஆனாலும், அங்கே நிறைய வான்களும், லாரிகளும்